5th September 1960]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏற்றுமதி செய்யப்பட்ட நாடுகள், பர்மா, நெதர்லண்ட்ஸ், வெஸ்ட் ஜெர்மனி, இடாலி யூனைடெட் கிங்டம், பெல்ஜியம், பெடரேட் மலேயா, சிங்கப்பூர். ஏற்றுமதி செய்யப்பட்ட எண்ணெயின் மதிப்பு 1,56,72,159 ரூபாய்.

SRI P. G. MANICKAM : கடலெண்ணெ ஏற்றுமதி செய்வதற்கு லைசென்சு பெற்றவர்களில் எத்தனை பேர்கள் வெளியூர்வாசிகள் ?

THE HON SRI M. BHAKTAVATSALAM : நான் எற்கனவே குறிப்பிட்டபடி சென்னையிலிருந்துதான் ஏற்றுமதி செய்யப்படவேண்டும். லைசென்சு யார் யாருக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதும் அவர்களில் யார் இந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவர்கள் என்ற விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை.

SRI P. G. MANICKAM : இப்படி வெளி நாடுகளுக்கு மணிலா எண்ணெ ஏற்றுமதி செய்யப்படுவதால் அதனால் இங்குள்ள ஏழைகள் வெகுவாக பாதிக்கப்படுகிறார்கள் என்பது அரசாங்கத்திற்கு தெரியுமா ? அப்படியானால் அது நியாயம் என்று உணருகிறார்களா ? அப்படியானால் அதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்கள் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: வெளிநாட்டு வியாபாரத்தை அடியோடு தடை செய்ய வேண்டுமென்ற உத்தேசம் இல்லை. விலைவாசிகளை உத்தேசித்து அதை பரிசீலனை செய்து எந்த அளவில் வெளிநாட்டு ஏற்றுமதி அனுமதிக்கப்படுமோ அந்த அளவில் அனுமதிக்கப்பட்டு வருகிறது. நமக்கு வெளிநாட்டு ஏற்றுமதி முக்கியமானது.

SRI A. GOVINDASAMY: மணிலா உற்பத்தியைப்பெருக்க, அதனுடைய உற்பத்தி பெருகுவதற்கு மார்க்கெட்டிங் கமிட்டி மூலமாக பொறுக்கு விதைகளை வழங்குவதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

*Construction of Roads in North Arcot district*

* 446 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) வடாற்காடு மாவட்டம் கலசப்பாக்கம் சமுதாயநலத் திட்டத்தைச் சேர்ந்த கிடாம்பாளையம், வேளானந்தல், மட்டவெட்டு, குப்பம் கிராமங்களுக்கு ரோடுகள் போடுவதைக் குறித்து பொது மக்களிடமிருந்து மகசர்கள் வந்தனவா ?

(ஆ) அப்படியானால், அவைகளின்மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் என்ன ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (a) No, Sir.

(b) Does not arise.

SRI S. M. ANNAMALAI : இந்த இரண்டு கிராமங்களுக்கு மகஜர் அனுப்பி அவைகளுக்கு ரசீதும் வந்திருக்கிறது. அப்படி வந்த ரசீதுகளில் வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருப்பதாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இருக்கும்போது கனம் அமைச்சர் அவர்கள் மகஜர் வரவில்லை என்று சொல்லுகிறார்கள். இன்னும் சர்க்கார் பரிசீலனையில் இருக்கிறது என்று சொல்லுகிறார்கள். மகஜர் கொடுத்து ரொம்ப நாட்களாகிறது. இந்த நான்கு கிராமங்களுக்கும் ரோடு வசதியே கிடையாது. அதற்குக் காரணம் நிலத்தை ஆர்ஜிதம் செய்ய வேண்டுமானால் நிலத்தை

விட மாட்டேன் என்று சொல்லுகிறார்கள். அதனால் அங்குள்ள நிலத்தை சட்ட பூர்வமாக ஆர்ஜிதம் செய்து ரோடு போடுவதற்கு சர்க்கார் முன் வருமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : என்னிடம் இப்பொழுது இருக்கக்கூடிய தகவல் கீழ்க்கண்டவாறு இருக்கிறது :—

"No representation or mahajar petition in the matter has been received by the Government. The Collector of North Arcot has stated that no mahajar from the villagers of Kidampalayam, Velanandal, Mattavettu and Kuppam villages in Kalasapakkam Block were received in regard to the formation of roads except a petition that was received in February 1960, from the President, Kidampalayam Panchayat for the formation of a road leading to Kidampalayam under 'Relief Programme'."

I do not find any petition sent to the Government or to the Collector. It does not depend on petitions alone . . .

MR. SPEAKER : I have to make a request to the hon. Members not to place me in an embarassing situation and to decide who is telling the truth—the Hon. Minister or the hon. Member. The hon. Members should not put supplementary questions for which they know the answers. If they have any information they should give it to the Speaker.

இம்மாதிரி உப கேள்விகள் கேட்கக் கூடாது. கனம் அமைச்சர் சொல்வதை ஒப்புக்கொள்வதாக இருந்தால் ஒப்புக்கொள்ளலாம்இ, ல்லா விட்டால் ஒப்புக்கொள்ளாமல் இருக்கலாம். அதற்கு நான் என்ன செய்வது. இப்படிப்பட்ட உப கேள்வி கேட்டால் என்னால் ஒன்றும் செய்ய முடியாது. கேள்விக்கு பதில் சொல்ல வேண்டியவர் கனம் அமைச்சர். அவர் சொல்வதில் நம்பிக்கை இல்லை என்று கனம் அங்கத்தினருக்குத் தோன்றினால் கனம் அமைச்சர் மீது நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வரலாம். ஆகவே அதுதான் வழியே தவிர இம்மாதிரியான கேள்விகளைக் கேட்பது என்பது சரியல்ல. இம்மாதிரி கேட்டு என்னை சங்கடமான நிலைமையில் வைப்பது சரியல்ல என்பதை மட்டும் சொல்லிக் கொள்ளுகிறேன்.

SRI S. M. ANNAMALAI : ஸார். . . . . . . ஸார், ஸார்.

MR. SPEAKER :: ஸார், ஸார் என்று கூப்பிட்டு என்ன செய்வது ? நான் ரூலிங் கொடுத்து விட்டேன். அதற்குப் பிறகு நீங்கள் என்ன சொல்லப் போகிறீர்கள் !

### *Cinema Theatres*

*447 Q.—SRI P. G. MANICKAM : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை மாகாணத்திலே எத்தனை சினிமா தியேட்டர்கள் இருக்கின்றன ?

(ஆ) டூரிங் சினிமாக் கொட்டகைகள் எத்தனை இருக்கின்றன ?

(இ) 1959–60-ல் சினிமா ஆட்டங்கள் மூலம் சர்க்காருக்குக் கிடைத்த வரித்தொகை எவ்வளவு ?

(ஈ) வரித் தொகையிலிருந்து சென்னை கார்ப்பரேஷனுக்கும், முனிசிபாலிட்டிகளுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட தொகை எவ்வளவு ?